ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2037
ஐப்பசி - அக்டோபர் 2006

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்



## குன்றக்குடி கந்தர் சஷ்டிப்பெருவிழா

27-10-2006

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்


| | | | |
|---|---|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | | மாதம் | : ஐப்பசி |
| [illegible] : 20 | | இதழ் | : 10 |




# சித்திரச் சோலைகளே!

சித்திரச் சோலைகளே – உம்மைத்
திருத்த இப்பாரினிலே
எத்தனை தோழர்கள் இரத்தம் சொரிந்தனரோ
உங்கள் வேரினிலே"

என்ற பாவேந்தரின் பாடல் வரிகள் தொழிலாளத் தோழர்களுக்கு மாத்திரம் அல்ல. பல குடும்ப மரங்களின் வேர்களுக்குத் தங்கள் வியர்வையை இரத்தமாய்ச் செலுத்திக்கொண்டிருக்கும் குழந்தைத் தொழிலாளத் தோழர்களுக்கும் சேர்த்துத்தான்! புத்தகப் பாரம் சுமக்க வேண்டிய பருவத்தில் குடும்பப் பாரத்தினைச் சுமக்கும் தளிர்கள்! விருட்சங்களின் வேர்களைத் தளிர்கள் தாங்கிக் கொண்டிருக்கின்ற அதிசயம் இன்னமும் இங்குதான் அரங்கேறிக் கொண்டிருக்கின்றது.

குழந்தைகள் வளர்ந்து இளைஞர்களாக மாறியபின் தொழிலாளர்களாக மாறலாம்! ஆனால் குழந்தைகளே தொழிலாளர்களாக மாறுவதை சமூகம் எப்படி சகித்துக் கொண்டிருக்க முடியும்?. இலவச மதிய உணவுத் திட்டம், இலவசச் சீருடைகள், இலவசக் காலணி, இலவசப் புத்தகங்கள், இலவச சைக்கிள் முதலின வழங்கி வந்தும் ஏன் குழந்தைத் தொழிலாளர்கள் கணிசமாகக் காணப்படுகின்றார்கள்?

## குழந்தைத் தொழிலாளர்கள் தோன்றுவதற்கான சமூகக் காரணிகள்

1. தாய் தந்தையரை இழந்த ஆதரவற்ற குழந்தைகள்.
2. கணவனை இழந்த ஏழை விதவைகளின் குழந்தைகள்.

3. கணவனால் கைவிடப்பட்ட பெண்களின் குழந்தைகள்.
4. குடும்பப் பொறுப்பு சுமக்க இயலாத பெற்றோர்களின் குழந்தைகள்.

இப்படிப் பல சமூகக் காரணிகள் தான். வறுமையும், கல்வி அறிவு இன்மையும் குழந்தைத் தொழிலாளர்களை உருவாக்குகின்ற களங்கள் ஆகும். கல்வியைக் கசப்பு மருந்தாய் நினைக்கும் சில குழந்தைகளும் குழந்தைத் தொழிலாளர்களாய் மாறிவிடுகின்றன. குழந்தைத் தொழிலாளர் தடைச்சட்டம் இப்பொழுது நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது. இந்த சட்டத்தின்மூலம் சுமார் 1 கோடி (ஒரு கோடி) குழந்தைத் தொழிலாளர்கள் மீட்கப்படுகின்றார்கள். பெண்களும், குழந்தைகளும் தான் ஏக போக உழைப்புச் சுரண்டலுக்கு எந்தவித எதிர்ப்பும் இன்றி ஆட்படுகின்ற எளிமையான மனித இயந்திரங்கள் என்ற நிலையே குழந்தைகளை, பெண்களை தொழிலாளர்களாய் வைத்துக்கொள்ள விரும்பும் நிலையாகும்.

கண்ணுக்கும், சமூகத்துக்திற்கும் தெரியாமல் எத்தனை குழந்தைகளின் அடிமை அவல வாழ்வு! வீடுகளில் மட்டும் சொந்தப் பெற்றோர்களால் வளர்க்கப்படும் குழந்தைகள் மட்டும் முழுமையான அன்புடன், நலமாக வளர்க்கப்படுகின்றனவா என்றால் அதுவும் சந்தேகத்திற்கு உரியது! தாய் தந்தையரின் எந்தச் சிறிய சண்டையும், கசப்பு வார்த்தைகளாகக் கூடிய கலந்து உரையாடலும் குழந்தைகளின் மனத்தை பாதிக்கின்றன! கோடி மின்னலின் சக்தியோடு, எதையும் உட்கிரகிக்கும் சர்வவல்லமை படைத்தவை குழந்தைகளே! அச்சத்தோடு வளர்க்கப்படும் குழந்தை துணிவை இழக்கின்றது. அதீதப் பாதுகாப்போடு வளர்க்கப்படும் குழந்தை தன்னம்பிக்கையை இழக்கின்றது! குறை கூறி வளர்க்கப்படும் குழந்தை தாழ்வு மனப்பான்மையில் சிதைகின்றது! ஏன்? எதற்கு? என்று கேள்விகள் கேட்க மறுக்கப்படும் குழந்தை சிந்திக்கும் திறனை இழக்கின்றது! பாராட்டி வளர்க்கப்படும் குழந்தை தன்னம்பிக்கையோடு வளர்கின்றது! அன்பு காட்டி வளர்க்கப்படும் குழந்தை ஆற்றல் மிக்க முழு மனிதனாய் பரிணமிக்கும். கணவன் மனைவியின் கருத்து வேறுபாடு, சிறுசண்டை சச்சரவுகள் கூடக் குழந்தைகள் முன்பு நிகழக்கூடாது. எந்தக் கசப்பான சம்பவமும் வன்சொற்களும் குழந்தைகளின் முன்பு பேசவோ நிகழவோ கூடாது. குழந்தைகள் மனம் கண்ணாடி! அவை வீசப்படும் வன் சொற்களால் உடைந்து சிதறிப்போகும்! குழந்தைகளுக்கு உடலில் காயம்

ஏற்பட்டால் உடனே ஆறிவிடும். ஆனால் மனக்காயம் ஏற்பட்டால் ஆறாத ரணமாய், வாழ்க்கை முழுவதும் எதிரொலிக்கும்! குழந்தைகளின் மனம் காயப்பட ஒருபோதும் அனுமதிக்காதீர்கள்! 1 கோடி குழந்தைத் தொழிலாளிகள் மீட்கப்படுகின்ற அதே நேரத்தில் அவர்களின் எதிர்காலம் குறித்து ஒரு திட்டவட்டமான செயல் திட்டம் தேவை! வேலையை இழந்து விடுகின்ற குழந்தைகளுக்கு மாற்று வழிகுறித்து, நிறைவான செயல்திட்டம் தேவை!

குழந்தைத் தொழிலாளர்கள் ஒரு சமூக அவலத்தின் வடிவம் மட்டும் அல்ல! உத்திரவாதம் இல்லாத குடும்ப வாழ்க்கையின் அடையாளம்! வேலையை இழக்கும் குழந்தையின் குடும்பத்திற்கு வேலை வாய்ப்பு உறுதிப்படுத்தப்பட வேண்டும்! தொழிலில் இருந்து மீட்கப்படும் குழந்தைகளுக்குத் தொலைநோக்கு வேலைவாய்ப்போடு கூடிய கல்வி வழங்கப்படவேண்டும். கல்வியில் இடையறவுப்பட்ட இந்தக் குழந்தைகளின் கல்வி என்பது கசப்பு மருந்தைக் கட்டாயமாய் விழுங்குவதைப் போல் அமையாமல் இனிமையான சூழல் நிறைந்ததாய் அமைய வேண்டும். கற்பிக்கும் முறைகளில் எளிமையும், இனிமையும் இயைந்து விளங்க வேண்டும்.

குழந்தைகளின் கல்வி பற்றிய அவசியத்தை சமூக விழிப்புணர்வினை தொலைக்காட்சி ஊடகங்கள், தொண்டு நிறுவனங்கள் வாயிலாக அறிவுறுத்த வேண்டும். குழந்தைகளின் வகுப்பறைகளில் பிரம்புகளுக்கு விடைகொடுக்க வேண்டும். ஆசிரியர் விடுமுறை எடுக்கும் நாளை மாணவர் திருநாளாய் எண்ணி மகிழ்வது அச்சப்படுத்தும் போதனை முறையே ஆகும்! எல்லோரையும் இயல்பாய்க் கற்க வைப்பதே ஒரு நல்லாசிரியரின் திருப்பணி ஆகும்! அறிவுத் தேனை எடுக்க அலைபாயும் வண்டுகள் முழுமையான அறிவுச் சுதந்திரத்துடன் செயல்பட வேண்டும்.

குழந்தைகள் புத்தகங்கள்! அவர்களைக் கிழித்து விடாதீர்கள்! மென்மையாகக் கையாளுங்கள்! குழந்தைகள் மலர்கள்! அவர்களைக் கசக்கி விடாதீர்கள்! குழந்தைகள் தெளிந்தநதி! மாசுபடுத்தி விடாதீர்கள்! குழந்தைகள் குடும்பச் சொத்து அல்ல! தேசத்தின் சொத்து! அவர்களைப் பாதுகாப்பதும், பராமரிப்பதும், முறையாக வளர்ப்பதும் நமது அன்றாட அவசியக் கடமையாகும். குழந்தைகளைக் காப்போம்!

புதிய தேசத்தை உருவாக்குவோம்!

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 68. வினை செயல்வகை

ஒரு செயலைச் செய்யும் வழிமுறைகளைப் பற்றி விளக்குவது. செய்யப்பெறும் ஒரு செயல் முழுமையான பயனைத் தரவேண்டுமாயின் அந்தச் செயலை முறையாகச் செய்தல் அவசியம். ஒவ்வொரு செயலுக்கும் நான்கு நிலைகள் உண்டு.

ஒன்று : செய்ய வேண்டிய செயலை எண்ணித் துணிதல்.

இரண்டு : எண்ணித் துணிந்த செயலைச் செய்தலுக்குரிய காலம், கருவி, துணை முதலியன பற்றி முடிவு செய்து ஆயத்த நிலைப்படுத்தல்.

மூன்று : செயலைச் செய்தல்.

நான்கு : செய்த செயலைப் பயன் தரும் வரை தொடர்ந்து செய்தல், பேணுதல், பாதுகாத்தல்.

செயலைச் செய்வதைவிடச் செயலுக்கு முன்னும் பின்னும்தான் அதிகப் பொறுப்பு இருக்கிறது என்பதறிக.

*சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு*
*தாழ்ச்சியுள் தங்குதல் தீது.* (671)

செய்யப்புகும் ஒரு செயலைப் பற்றி நன்றாக ஆய்வு செய்து துணிந்தபின்பு அச்செயலைத் துணிவுடன் செய்யாது காலம் நீட்டித்தல் தீது.

ஒரு செயலைச் செய்வது என்று துணிந்த பிறகு காலம் நீட்டித்தால் முடிவு எடுத்திருந்த செயலுக்குரிய காலம் மாறுபடுதலால் சூழ்நிலை மாறுபட்டுச் செயல் செய்தற்குரிய சூழல் கெடும் என்பதறிக.

காலம் என்பது பலமுனைகளிலும் தொடர்புடையது. ஆதலால் காலம் நீட்டித்தல் கூடாது. காலம் நீட்டித்தால் ஏற்படும் இழப்பு ஒன்றாக இருக்காது; பலப்பல என்பது ஓர்க. காலந்தவறுதல் தாழ்ச்சியைத்தரும் என்பதால் காலம் நீட்டித்தலையே தாழ்ச்சி என்று கூறினார்.

*தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க*
*தூங்காது செய்யும் வினை.* (672)

காலம் நீட்டித்துச் செய்யக்கூடிய செயல்களைக் காலம் நீட்டித்தே செய்க. காலந்தாழ்த்தாது செய்யக்கூடிய செயல்களைக் காலந்தாழ்த்தாது விரைந்து செய்க.

கருத்து மாற்றங்களை எதிர்பார்த்தல், ஆகாது என்று ஒரு சிலரை ஒதுக்குதல் ஆகியவற்றில் காலம் நீட்டிப்பது பயன் தரலாம். "காலம் மருந்து" என்பது அனுபவ வாக்கு.

ஆக்கத்தின்பாற்பட்ட பணிகள், பிறர் துன்பம் துடைக்கும் பணிகள் ஆகியவற்றில் காலம் தாழ்த்துதல் கூடாது. இந்த வகைப்பணிகளில் காலந்தாழ்த்தினால் இல்லையென்று கூறியதாகவே கருதப்பெறும்.

*ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்*
*செல்லும்வாய் நோக்கிச் செயல்.* (673)

செயல் செய்து முடிக்கக்கூடிய பல்வேறு வாயில்களையும் அறிந்து செய்தால் செயல் நன்றாக முடியும். செயலைச் சிறப்புச் செய்து முடிக்கக்கூடிய வாயில்கள் கிடைக்காது போனால் செய்யக் கூடியதைச் செய்க.

ஒரு பெரிய செயலைச் செய்து முடிக்கப் பல்வேறு வாயில்களையும் கருவியாகக் கொண்டு செய்து முடித்தல் வேண்டும். அதாவது ஒரே வாயிலை மட்டும் நம்பிச் செயலைத் தொடங்குதல் கூடாது என்பதறிக.

பெரிய செயல்களைச் செய்வதற்குரிய வாயில்கள் அமையாது போயின் செய்யக்கூடியவைகளைச் செய்க என்பது "செல்லும்வாய் நோக்கிச் செயல்" என்பது.

*வினைபகை என்றுஇரண்டின் எச்சம் நினையுங்கால்*
*தீஎச்சம் போலத் தெறும்.* (674)

செய்யும் செயல், பகைமுடித்தல் ஆகிய இரண்டும் முழுமையாகச் செய்து முடிக்கப்பெறாதுவிடின் அணைக்காது விடுத்த தீப்போலத் துன்பம் தரும்.

செய்யத் தொடங்கிய செயலை முழுமையாகச் செய்து முடிக்காது போனால், பதிலுக்குத் துன்பம் வரும். பகையை மாற்றுதலாகிய பணியை அரைகுறையாய் விடினும் துன்பமேயாம்.

வீட்டில் பற்றிய தீ, ஒரு பகுதி அணைக்கப்பெறாது விடப்பட்டால் அணைத்த பயனும் போயிற்று. விடுத்த தீ மேலும் பரவி அழிக்கும்.

*பொருள்கருவி காலம் வினையி னொடுஐந்தும்*
*இருள்தீர எண்ணிச் செயல்.* (675)

செயல் செய்யப் புகும்போது செய்து முடித்தற்குரிய பொருள், கருவி, காலம், செயல், இடம் ஆகிய ஐந்தையும் மயக்கம் இல்லாமல் ஆய்வு செய்து எண்ணிச் செய்க.

தற்சார்பாலும் சோம்பலாலும் வருவது மயக்கம்.

*முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்*
*படுபயனும் பார்த்துச் செயல்.* (676)

செய்யப்புகும் செயல் முற்றாக முடியும் நிலையும், இடையூறு வரும் நிலைகளும் அச்செயல் முடித்தால் அடையும் பயனும் நோக்கிச் செய்க.

அதாவது, இடையூறுகளைக் கடந்து செயல் செய்யப் பெருமுயற்சி தேவை. முயற்சியின் அளவுக்குப் பெரும் பயன் இல்லாது போனால் ஒரு செயலைச் செய்வானேன்?

*செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை*
*உள்ளறிவான் உள்ளம் கொளல்.* (677)

செய்யக்கூடிய செயல்களைச் செய்பவனின் செயல்முறையாவது அச்செயலில் முன் அனுபவம் உடையாருடைய உள்ளத்தைத் துணையாகக் கொண்டு செய்தலாகும்.

பட்டறிவிற்கு ஈடானது ஒன்றில்லை. ஆதலால், "உள்ளறிவான் உள்ளம் கொளல்" என்றார். பட்டறிவுடையாரின் துணைக் கொண்டு செய்தால் காலம், பொருள், ஆற்றல் மிச்சப்படுவதுடன் சில சிக்கல்களும் தவிர்க்கப்பெறும்.

*வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்*
*யானையால் யானையாத்தற்று.* (678)

ஒரு செயலால் பிறிதொரு செயலை ஆக்கிக் கொள்ளல் மதம் பிடித்த யானையைப் பிறிதொரு யானையால் பிடித்தது போலாம்.

ஒரு யானையைக் கொண்டு பிறிதொரு யானையைப் பிடித்தல் யானை பிடிக்கும் மரபு. "மானைக் காட்டி மானைப் பிடித்தல் என்றும் ஒரு வழக்கு உண்டு.

ஆழ்ந்த சிந்தனையுடன் செய்தால் ஒரு செயல்வழிப் பல செயல்கள் கைகூடும். எந்தவொரு தூய்மையான தொண்டும் பன்முனைப் பயன்தரும்.

*நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே*
*ஒட்டாரை ஒட்டிக் கொளல்.* (679)

நண்பருக்கு நல்லது செய்தலினும் பகைவரிடமிருந்து பிரித்து எடுத்தவரிடம் விரைந்து ஒட்டிக்கொள்க.

பகைவரிடமிருந்து பிரித்து எடுத்தவர் ஊசலாட்டத்தில் மீண்டும் மாறுவர் என்று கருதி விரைந்து ஒட்டிக் கொள்க என்றார்.

நண்பருக்குப் பகைவரால் வரும் துன்பத்தைத் தடுத்தல் நன்மை செய்தலினும் பயனுடையது என்பது கருத்து.

*உறைசிறியார் உண்ணடுங்கல் அஞ்சிக் குறைபெறின்*
*கொள்வர் பெரியார்ப் பணிந்து* (680)

சிறியராய் இருப்பவர், தம் பகைவரைக் கண்டு உள் நடுங்கி அஞ்சுதலினும் பெரியாரைப் பணிந்து சமாதானம் கொள்ளுதல் நல்லது.

அஞ்சி வாழ்தலினும் பொருது முடித்தற்கியலாதவரிடம் பொருது அழிதலினும் சமாதானம் நல்லது என்று கூறியவாறு.

(தொடரும்)

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

தாள்விலை ஏற்றம், அச்சுச் செலவு அதிகரிப்பு ஆகிய காரணங்களால் அடியிற்காணுமாறு இந்த இதழ் முதல் சந்தாத் தொகையைச் சற்று கூடுதலாக்க வேண்டிய நிலை "மக்கள் சிந்தனை"க்கு ஏற்பட்டுள்ளது.

அன்புகூர்ந்து சந்தாதாரர்கள் ஏற்று வழக்கம்போல் ஆதரவளிக்கும்படி அன்புடன் வேண்டிக்கொள்கின்றோம்.

| | | |
|---|---|---|
| **தனி இதழ்** | ரூ. | 5.00 |
| **ஆண்டுக்கட்டணம்** | ரூ. | 60.00 |
| **வாழ்நாள் கட்டணம்** | ரூ. | 600.00 |
| **புரவலர் கட்டணம்** | ரூ. | 1000.00 |
| (வழக்கம்போல்) | | |

**- ஆசிரியர்**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.**சாமி. தியாகராசன்**)

இந்த நிலையில் தேவர்கள் இருக்க அனுமன் சீதையைத் தேடிக்கொண்டு இலங்கையுள் புகுந்து செல்லும் போது மண்டோதரியின் அரண்மனையை அடைகின்றான். அங்கே ஓர் காட்சியைக் காணுகின்றான்.

தென்றலாகிய தேவன் தன் அணிமணி ஆபரங்களுடன் மண்டோதரி உறங்கும் அறையின் வாயிலில் உட்கார்ந்திருக்கின்றான். அப்போது" ஏவலாளர் வந்து அழைக்க உள்ளே செல்கின்றான். சிறிது நேரம் கழித்து வெளியே வந்து உட்காருகிறான். பின்பு வந்து உழையர் கூவ மறுபடியும் போகிறான். பிறகு வந்து உட்காருகின்றான் இப்படியாக உள்ளே செல்வதும் வெளியே வருவதுமாக செயல்புரியும் தென்றல் தேவன் அங்கே என்னதான் செய்கிறான்?

மண்டோதரி உறங்கும் காலத்தில் அவள் உறக்கம் கெடாமல் அதே சமயம் அவள் உறங்குவதற்கு ஏற்ற அளவில் தென்றல் தேவன் சென்று தன் சக்தியாகியக் காற்றை மெல்லென அங்கே அந்த அறையில் வீசவேண்டும். பக்கத்தில் இருக்கும் பணியாளர் போதும் என்றால் வெளியே வரவேண்டும். காத்திருக்க வேண்டும். தேவையான போது கூப்பிட்டால் மீண்டும் போகவேண்டும். இதுதான் தென்றலின் வேலை. தென்றலின் கதி இப்படியாகவா? இருக்க வேண்டும். என் செய்வது? இராணனின் கொற்றம் அப்படி இருக்கிறதே. ஓர் ஊஞ்சல் முன்னும் பின்னுமாகச் சென்று வருவதைப் போன்று தென்றல் தேவன், மண்டோதரியின் பணியாளர் கூவ உள்ளே செல்வதும் பிறகு வெளியே வருவதுமாகப் பணிபுரிகின்றான் என்பதைப் "பெருந்தென்றல் - உழையர் கூவ புக்கு ஏகு எனப் பெயர்வது - ஓர் ஊசலின் உளதாகும்" என்னும் வரிகளால் கம்பன் நமக்குச் சுட்டிக்காட்டுகின்றான்.

கூனிக் கூனி குறுகிப் பணியாற்றிய தென்றல் தேவன் நிமிர்ந்து நின்று இராவணனை வேதனைக்குள்ளாக்கிய விதத்தை இனிக் காண்போம்.

"ஈசனார் கண்ணில் வெந்தான் என்னும் ஈது இழுதைச்சொல் இவ்
வாசம் நாறு ஓதியாளைக் கண்டனன் வவ்வல் ஆற்றான்
பேசலாம் தகைமைத்து அல்லாப் பெரும்பிணி பிணிப்ப நீண்ட
ஆசையால் அழிந்து தேய்ந்தான் அனங்கன் அவ்வுருவம் அம்மா"

என்று சீதையின் மேனியழகையும்,

"மஞ்சு ஒக்கும் அளகஓதி மழைஒக்கும் வடிந்த கூந்தல்
பஞ்சு ஒக்கும் அடிகள் செய்ய பவளத்தின் விரல்கள் ஐய
அஞ்சொற்கள் அமுதில் அள்ளிக்கொண்டவள் வதனம் மைதீர்
கஞ்சத்தின் அளவிற்றேனும் கடலினும் பெரிய கண்கள்"

என்று சீதையின் உறுப்பு நலனையும் தனித்தனியாகச் சொல்லிச் சொல்லிச் சூர்ப்பணகை வருணிக்க வருணிக்க இராவணனைக் காமத் தீ முழுவதுமாகப் பற்றிக்கொண்டது. அத்தீயால் வெந்து வெதும்பும் இராவணன் அதனைத் தணிக்க வேண்டி ஒரு குளிர்ச்சோலைக்குள் செல்கிறான். தன்னை அடக்கியாளும் இவனைத் தொட்டுத் துன்பம் செய்ய இதுதான் தருணம் எனக் கருதியத் தென்றல் தேவன் தன் காற்றில் மல்லிகை மணத்தைக் கலந்து இராவணன் நெஞ்சில் சென்று வீசச் செய்கிறான். அக்காற்றும் அம்பு போன்று இராவணன் நெஞ்சுக்கு எதிரில் செல்ல ஏ தென்றலே! நீ உடன் அப்பால் சென்று விடு எனச் சீறி அதனை அப்புறப்படுத்துகின்றான்.

"..........................................................................................

..........................................................................................

மன்றல் தங்கு அலங்கல் மாரன் வாளிபோல மல்லிகைத்
தென்றல் வந்து எதிர்ந்த போது சீறுவானும் ஆயினான்"

(சூர்ப்பணகை சூழ்ச்சிப் படலம்-94)

மண்டோதரி அறைவாசலில் மட்டும் அன்றி இராவணன் உள்ளிட்ட அரச குடும்பத்தினர் அத்தனைப் பேரின் வாயில் புறத்தில் நின்று சேவகம் செய்து வரும் தென்றல் தேவனுக்கு இராவணன் அழைக்காமலே அவன் எதிரில் சென்று சேர இப்போது எப்படித் தைரியம் வந்தது?

"பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண்"

(குறள் 146- பிறனில் விழையாமை)

என்னும் இந்தக் குறள் மூலம் மாற்றான் மனைவியை விரும்புவானிடத்துப் பகைபாவம் அச்சம் குடிப்பழி என்ற இந்த நான்கு குற்றங்களும் நீங்காமல் நிலைத்துத் தங்கும் என்று திருவள்ளுவர் கூறுகின்றார். இந்தக் கூற்றைவிட வேறு ஒரு சத்திய வாக்குத் தேவையா என்ன? இந்த வகையில் மாற்றான் மனைவியாகிய சீதையை மனச்சிறையில் வைத்ததால் இராவணனைப் பாவம் பற்றிக் கொண்டது. பாவம் நின்ற இடத்தில் கோபமும் மறனும் மானக்கொதிப்பும் முதலான சுத்த வீரனுக்குரிய குணங்கள் நில்லாமல் நீங்கி விடும் என்பதால் இராவணனை விட்டு அக்குணங்கள் நீங்கிவிட்டன. இப்போது அவன் தன்னிலை தாழ்ந்து தலையின் இழிந்த மயிருக்குச் சமமாக ஆகிவிட்டான். இராவணன் எதிரிகளுக்குத் தைரியம் வர இது போதாதா என்ன? போதும். இந்த வகையில் தான் நமது தென்றல் தேவனுக்குத் தைரியம் வந்தது. தைரியம் வந்தும் இராவணனிடத்துள்ள அச்சம் நீங்காமையால் சோலையில் தங்கிய அவனிடத்துத் தன் காற்றைச் செலுத்தி ஒத்திகைப் பார்த்துக் கொண்டான். அவ்வொத்திகையில் இராவணன் தன் அழைப்பு இல்லாமல் வந்த காற்றைப் பிடித்துத் தண்டிக்காமல் விட்டுவிட்டதால் இராவணன்ின் மானக் கொதிப்பில் மாற்றம் ஏற்பட்டுள்ளதைத் தென்றல் தேவன் உணர்ந்து கொள்கின்றான். இனித் தானே சென்று இராவணனைத் தீண்டிப் பார்த்துவிட வேண்டும் என முடிவு செய்து கொள்கின்றான்.

காமத் தீயால் பற்றப்பட்ட இராவணன் உடல் பற்றி எரிவதால் அதனை அவிப்பான் வேண்டி அவன் எடுத்துக்கொண்ட முயற்சிகள் பலனளிக்காமல் கடைசியில் தேவர் தச்சனாகிய விசுவகருமனை அழைத்து சந்திரகாந்தக் கற்களால் ஆன மணிமண்டபம் இயற்றச் செய்து அதனுள்ளே சென்று தங்குகின்றான். குளிர் ஊட்டப்பட்ட இக்கால மண்டபங்கள் போன்றது சந்திரகாந்தக் கற்களால் ஆக்கப்படும் அக்கால மண்டபம். அத்தகைய மண்டபத்துள் சென்று தங்கிய இராவணன் பின்னர்க் கற்பக மரத்தின் பசும்பொன்னை ஒத்த குளிர்ச்சி பொருந்திய தளிர்களாலும் மலர்களாலும் ஆக்கப்பட்ட படுக்கையில் படுத்துச் சிறிது காமத்தீ அவியப் பெற்றான். இவனை இப்படி விட்டுவிடக்கூடாது, மிகுந்த துன்பம் தர வேண்டும் என உள்ளத்துள் கொண்ட தென்றல் தேவன் இது தான் சமயம் என்று அந்த மண்டபத்தின் சாளரத்தில் புகுகின்றான்.

❋❋❋

# அருளாலயத் துணை

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி -9)

*வேலும் மயிலும் துணையென்பார்*
*வேண்டும் வேலனைக் கும்பிடுவார்!*
*மேலும் சக்தித் துணையென்பார்*
*மேல்மரு வத்தூர் செல்வோர்கள்!*
*ஏலும் கற்பகப் பிள்ளையாரை*
*ஏத்துவோர் தமக்குத் துணையென்பார்!*
*சாலும் வெங்கடா சலபதியைச்*
*சாற்றுவர் பலபேர் துணையென்றே!*

*சாமியே சரணம் என்றாலும்*
*சாற்றும் அரோகரா என்றாலும்*
*பூமியே அதிரக் கோவிந்தா*
*போட்டு முழக்கம் செய்தாலும்*
*சேமியா பாயச இனிப்பாகச்*
*சேர்ந்தே வாழ்க என்றாலும்*
*ஆமிவை யெல்லாம் அவரவர்க்காய்*
*ஆகும் துணையின் சார்பொருளே!*

*இப்படி யாக ஆன்மீக*
*இயக்கத் தாலே துணைதேடும்*
*ஒப்பிய ஆன்ம உலகத்தின்*
*உயர்மா னுடத்து வாழ்க்கையிலே*
*செப்பிடும் தெய்வச் சிவனாரும்*
*சிறந்த கரிய திருமாலும்*
*கப்பிய கருப்பும் சிவப்புமாய்*
*கலந்தே இருப்பர் ஆண்பெண்ணாய்!*

*காட்சி மிக்க ஆண்பெண்ணாய்க்*
*காணும் கடவுளர் தோற்றம்போல்*
*மாட்சி மிக்க இல்லறத்தில்*
*மாண்புறும் ஆண்மை பெண்மைகளால்*
*நீட்சி மிக்க உலகத்தில்*
*நீண்ட கால மாய்த்தொடரும்*
*ஆட்சி மிக்க வாழ்வினிலே*
*ஆண்பெண் பெண்ஆண் துணையாவார்!*

வாழ்க்கைத் துணையை வள்ளுவர்தான்
    வாழ்க்கைத் துணைநலம் என்றாலும்
வாழ்க்கைத் துணைநலம் பெண்ணன்றி
    வாழ்க்கைத் துணைநலம் ஆணுந்தான்!
வாழ்க்கைத் துணைநல அனுபவத்தை
    வாய்ப்பாய்ப் பெறாத ஆண்பெண்கள்
வாழ்க்கைத் துணைநலம் பற்றித்தான்
    வாய்ப்பாய்ச் பேச ஒண்ணாதே!

வாழ்க்கைத் துணைநலம் ஆவதற்கு
    வாய்ப்புத் தேடி வந்தாலும்
வாழ்க்கைத் துணைநலம் ஆகாமல்
    வாணாள் முழுதும் தனிமையுடன்
வாழ்க்கை நடத்திய திலகவதி
    வாழ்ந்த வாழ்க்கை என்னென்பேன்!
வாழ்க்கைத் துணைநலம் ஆகாமல்
    வாழ்வைத் துறத்தல் தவமன்றோ!

வாழ்க்கைத் துணைநலம் ஆவதற்கு
    வாய்ப்பை நழுவ விட்டோரும்
வாழ்க்கைத் துணைநலம் ஆனாலும்
    வாழ்வை முறித்துக் கொண்டோரும்
வாழ்க்கைத் துணைநல வாழ்க்கையினை
    வாழ விரும்பி மறைமுகமாய்
வாழ்க்கை நடத்து வோரானால்
    வாழ்வைப் போலி என்போமே!

தாய்க்குத் தந்தை துணைபோல
    தந்தை தாய்க்குத் துணையாவார்!
வாய்க்கும் மக்கட் பேறுகள்தாம்
    வயதுறும் பெற்றோர்த் துணையாவார்!
நோய்க்கு மருந்து பகையெனினும்
    நொடியில் துன்பம் போக்கு வதால்
சேய்க்குத் தாய்போல் துணையென்றே
    செப்பிட வேண்டும் தத்துவமாய்!

வாய்க்குச் சுவைதான் என்றாலும்
வனப்புறு இனிப்புத் துணையாகா!
பேய்க்குப் பாசம் துணையாமோ?
பெரிதாய் உயிரைக் கவ்வுகையில்!
நாய்க்குக் குட்டித் துணையில்லை
நவிலுறும் உலக வாழ்க்கையிலே
காய்க்குக் கனிதான் பகையாமோ?
கனிந்தால் தெரியும் துணையெல்லாம்!

விரலுக்கு வீணை துணையாகும்
விழலுக்குப் பாய்ந்தநீர் துணையாமோ?
இரவுக்கு நிலவு துணையாகும்
இரும்பனிக்குச் சூரியன் துணையாமோ?
வரவுக்குச் செலவு பகைபோல
வருகின்ற தென்றலும் வாடையுமாம்!
உரலுக்கு, உலக்கை துணையாமோ!
ஒன்றோடு, ஒன்று இருப்பதினால்!

இப்படி யாகத் துணைபற்றி
ஏதோ புலம்பித் திரிகையிலே
அப்பிய முன்முடி போல்முகத்தர்
ஆருயிர்ப் பருகும் அருட்கண்ணர்
தொப்பிப் போன்ற தலைப்பாகர்
தோற்றத் தோடே வந்தொருவர்
"சுப்பிப் பொறுக்கிப் பயனென்ன!
சூழும் குளிரை விரட்டாமல்!"

என்றே உரத்த குரலாலே
இடிபோல் இரைந்தார், இருங்கனவில்!
நன்றே நம்மைத் தெருட்டியவர்
நனவில் தோன்றாத் துணையாகி
ஒன்றே உரைத்தார் பெரியாரை
உறுதுணைக் கோடல் வேண்டுமென்ற
அன்றே அடிகள் அடிவீழ்ந்தேன்
அருளா லயத்தின் துணையென்றே!

---

# பதஞ்சலியர் பலர்

(முனைவர். **ந.இரா. சென்னியப்பனார்**)

தில்லைச் சிற்றம்பலத்தில் கூத்தப்பெருமான் நடஞ் செய்கின்றான். பதஞ்சலி முனிவர், வியாக்கிரபாதர் ஆகியவர்க்காக நடஞ் செய்கிறான் என்பது புராண வரலாறு.

*"பதஞ்சலிக்கு அருளிய பரமநாடக என்று*
*இதஞ்சலிப்பு எய்த நின்று ஏங்கினர் ஏங்கவும்"*

என்று பதஞ்சலி முனிவர்க்காக நடஞ்செய்வதை மணிவாசகப் பெருமான் குறிப்பிட்டுள்ளார்.

ஆதிசேடன் நிலவுலகில் பதஞ்சலி முனிவராகத் தோன்றினார். அத்திரி முனிவரும் அவர் மனைவி அனுசூயா தேவியும் மகப்பேறு வேண்டித் தவம் செய்தனர். அனுசூயா தேவி இறைவனை வணங்கி அஞ்சலி செய்து கொண்டு இருந்தாள். இறைவன் அருளால் ஆதிசேடன் - அனுசூயா தேவியின் கைகளின் இடையில் சிறு நாகப்பாம்புக் குட்டியாய் வீழ்ந்தான். அனுசூயா தேவி பயந்து கைகளை உதறினாள். பாம்புக்குட்டி அவள் காலின் மீது நழுவி வீழ்ந்தது. பாதத்தின் விழுந்து அசைந்து (சலித்து) சென்றதால் பதஞ்சலி எனப்பெயர் ஏற்பட்டது. முன்பே மந்தியந்த முனிவரின் மகனான வியாக்கிரபாதர் தில்லையில் தவஞ்செய்து கொண்டிருந்தார். அதிகாலையில் பூக்களில் வண்டு மொய்ப்பதற்கு முன் ப்பார்த்துக் கொய்வதற்காகக் கை நகங்களில் கண்களையும் மரங்களில் எளிதாக ஏறிப் பறிப்பதற்காகப் புலிக்கால்களையும் பெற்றிருந்தார். ஆதலால் புலிக்கால் முனிவர் என்று பெயர் ஏற்பட்டது. தில்லை - தலமரம் ஆதலால் தில்லை, தில்லைமூதூர் எனப் பெயர் ஏற்பட்டது. புலிக்கால் முனிவர் வழிபட்டதால் புலியூர் என்று பெயராயிற்று. பேரம்பலம் (பெரிய சபை) சிற்றம்பலம் (சிறிய சபை) என இரண்டு சபைகள் அங்குள்ளன. நடராசப் பெருமான் சிவகாமி அம்மையுடன் நடனம் புரிந்து அருள்செய்கின்ற சபை சிற்றம்பலம் ஆகும். இரண்டையும் சேர்த்துப் புலியூர்ச் சிற்றம்பலம் என வழங்கும் முறை ஏற்பட்டது.

*"நிறைவெண் கொடிமாடம் நெற்றி நேர்தீண்டப்*
*பிறைவந்து இறைதாக்கும் பேரம்பலம் தில்லைச்*

*சிறைவண்டு அறையோவாச் சிற்றம்பலம் மேய*
*இறைவன் கழல்ஏத்தும் இன்பம் இன்பமே"*

என்று திருஞானசம்பந்தர் பேரம்பலம், சிற்றம்பலம் இரண்டையும் குறிப்பிட்டுள்ளார். தேவாரத் திருவாசகப் பாடல்களில் எங்கும் சிதம்பரம் என்ற ஆட்சியில்லை.

ஊற்று - ஊத்து, காற்று - காத்து, ஏற்றம் - ஏத்தம், புற்று - புத்து, கற்றை - கத்தை, நாற்று - நாத்து, மாற்று - மாத்து, நேற்று - நேத்து, தூற்று - தூத்து, தேற்று - தேத்து, தோற்று - தோத்து முதலியன பேச்சு வழக்கில் றகரம் தகரமாகத் திரிந்து வழங்குகின்றன. அதுபோல் சிற்றம்பலம் பேச்சுவழக்கில் சித்தம்பலம் ஆயிற்று. காலம் செல்லச் சித்தம்பலம் சிதம்பரம் ஆயிற்று. சித்+அம்பலம்=சிதம்பரம் - ஞானசபை எனப் பொருள் கொண்டனர். சிற்றம்பலம் என்பதனையும் சித்+அம்பலம்=சிற்றம்பலம் எனப் பிரித்துப் பொருள் கூறத் தொடங்கினர். தில்லைச் சிற்றம்பலக் கூத்தனைத் தெரிசத்தவர்களில் பதஞ்சலி முனிவர் தனிச்சிறப்பு உடையவர்.

*நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடின்*
*நந்திகள் நால்வர், சிவயோக மாமுனி*
*மன்றுதொழுத பதஞ்சலி வியாக்கிரமர்*
*என்றிவர் என்னோடு எண்மரும் ஆமே*

என்று திருமூலர் பாடியுள்ளார்.

நந்தியாகிய இறைவன் அருள்பெற்ற தலைவர்களை ஆராய்ந்து கண்டால் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வர் ஆவர். அவர்களுடன் சிவயோக மாமுனிவரும் ஒருவர். அவர்க்குப்பின் சிற்றம்பலத்தைத் தொழுத பதஞ்சலி முனிவர் வியாக்கிரபாதர் ஆகியவர் முற்கூறிய ஞானகுருவின் மரபினர். அம்மரபு திருமூலராகிய என்னோடு சேர்த்து எண்மர் ஆவர் என்பது பாடற்பொருள். மன்றுதொழுத பதஞ்சலி மன்றுதொழுத வியாக்கிரமர் என்று இருவர்க்கும் மன்றுதொழுத என்பதனைக் கூட்டிக்கொள்ளலாம்.

வடமொழி இலக்கணம் யோகமதம் ஆகியவற்றில் பதஞ்சலி என்ற பெயரில் இருவர் வருகின்றனர். அவர்கள் மன்று தொழு பதஞ்சலியின் வேறானவர். வடமொழியில் மாகேச்சுரசூத்திரம் முதலில் தோன்றிய இலக்கணம் ஆகும். அதன் வழி பிருகற்பதி ஒரு நூல் செய்தான். அதன்பின் இந்திரன் என்பான் ஐந்திரம் என்ற பெயரில்

இலக்கணம் செய்தான். இந்திரன் என்பது வடமொழிப் புலவன் பெயர். இந்திரன் செய்ததால் ஐந்திரவியாகரணம் எனப் பெயர் ஏற்பட்டது. தொல்காப்பியப் பாயிரம் சுட்டுகின்ற "ஐந்திரம்" என்பதும் இந்நூலே. ஐந்திரம் வழக்கற்றுப் போகப் பிற்காலத்தில் பாணினி என்பவர் வேறு ஒரு தனி இலக்கணம் செய்தார். பாணினி வியாகரணம் என்று அதற்குப் பெயர். நமக்குத் தொல்காப்பியம் போல வடமொழியாளர்க்குப் பாணினி வியாகரணம் சிறந்த இலக்கணம் ஆகும். பாணினி வியாகரணத்திற்கு வரருசி, பதஞ்சலி ஆகிய இருவர் உரை செய்துள்ளனர்.

பதஞ்சலி உரைக்குப் பாடியம் என்று பெயர். பாடியம் செய்த ஆசிரியனும் வியாக்கிரபாத முனிவனோடு ஒருங்கு எண்ணப்படும் பதஞ்சலியும் வேறாவர் என்று ஆய்வுப் பேரறிஞர் அரசஞ் சண்முகனார் தொல்காப்பியப் பாயிர விருத்தியில் குறிப்பிட்டுள்ளார். பதஞ்சலி உரையில் சந்திரகுப்தன் புட்பமித்திரன் ஆகியோர் சபைகளைக் குறிப்பிட்டுள்ளார். எனவே அவர் காலத்துக்குப் பின்னவர் ஆவார்.

தத்துவ உலகில் சாங்கியம், யோகம், வைசேடிகம் நியாயம், மீமாம்சம் ஆகியவை ஐந்து தெரிசனங்கள் என்று வழங்கப்படும்.

புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என அறுவகைப்படும் என்று சிவஞான முனிவர் சிவஞான போதமாபாடியத்தில் குறிப்பிட்டுள்ளார். எனவே யோக மதம் என்பது சைவசித்தாந்தத்துக்குப் புறம்பானது என்பது தானே புலனாகும். பதஞ்சலி செய்த யோக சூத்திரம் என்ற நூலே யோக மதத்தின் அடிப்படை நூலாகும். மன்று தொழுபதஞ்சலி வேறு யோக சூத்திரம் செய்த பதஞ்சலி வேறு. மன்றுதொழு பதஞ்சலி கூத்தப்பிரானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபட்டுப் பேறு பெற்றவர். சைவத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகள் உண்டு. யோகத்தில் சொல்லப்படுகின்ற எட்டு உறுப்புக்கள் தொல்காப்பியம், தொல்காப்பிய உரைகள், திருமந்திரம் ஆகியவற்றில் சுட்டப்பட்டுள்ளன. நான்கு நெறிகளுள் ஒன்று யோகம். மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா (சிவஞானம்-8ஆம் நூற்பா-மேற்கோள்) என்பது சைவசித்தாந்தத் துணிவு.

தத்துவ உலகில் யோகம் என்பதற்கு ஒன்றுதல் என்று பொருள் கொள்ளுதல் மரபு. ஒன்றியிருந்து நினைமின்கள், ஒருநெறிய மனவைத்துணர்தல் என்று திருமுறைகள் குறிப்பிடும். யோகமத்தில் யோகம் என்பதற்குப் பிரிதல் என்பது பொருள்.

யோகம் என்ற சொல்லுக்குப் பிரிதல் என்பதே இங்கு பொருளாகின்றது. பிரகிருதித் தொடர்பிலிருந்து புருடன் பிரிதல் தான் யோகம் என்று கி. இலக்குமணன் இந்திய தத்துவ ஞானம் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இக்கொள்கை சைவசித்தாந்தத்திற்கு மாறானது. சைவத்திற்கு மாறான புறச்சமயங்களுள் ஒன்றான யோகம் என்ற சமயத்துக்குரிய யோகசூத்திரத்தைச் செய்த பதஞ்சலி என்பவர் மன்றுதொழு பதஞ்சலியின் வேறானவர் என்பது எளிதில் புலனாகும்.

சைவத்துக்குப் புறச்சமயமான யோகமதத்துக்குரிய அடிப்படை நூலான யோகசூத்திரம் என்ற நூலைச் செய்தவர் வேறொரு பதஞ்சலியாவர். பதஞ்சலி சூத்திரப்படி தில்லைச்சிற்றம்பலத்தில் வழிபாடு நடைபெறுகின்றது என்பது எவ்விதத்தில் சைவத்துக்கு உடன்பாடாகும்?



## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை" யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*- ஆசிரியர்*

# திருநாவுக்கரசரின் தசபுராணம்

(தா. குருசாமி தேசிகர், மதுரை)

திருநாவுக்கரசரின் திருப்பதிகங்களில் சிவபெருமான் நிகழ்த்தியருளிய தொன்மையான புராணச் செய்திகள் பல விரித்து உரைத்துப் போற்றப்பட்டுள்ளன. அவை ஒரு கலைக்களஞ்சியம். (பன்னிரு திருமுறைவரலாறு - க. வெள்ளைவாரணனார்)

## தொன்மை

தொல்காப்பியர் "தொன்மை"யானது என்பது பழமையானது என்றும், அது உரையொடு சேர்ந்துவரும் என்றும், அது ஒரு வனப்பாகும் என்றும் மொழிவர். (தொல்காப்பிய வரலாறு - க. வெள்ளைவாரணனார்)

*தொன்மைதானே உரையொடு புணர்ந்த*
*பழமை மேற்றே -*

இந்நூற்பாவிற்கு, இளம்பூரணர் "உரையொடு புணர்தல்" - நெடுங்காலமாகப் பலராலும் சொல்லப்பட்டு வழங்கிவருதல் என்று உரை கூறி, பழங்கதை இராமசரிதை பாண்டவசரிதை என்பர்.

## சிலம்பு

சிலப்பதிகாரம் ஊர்காண்காதையில், "தொன்றுபட வருஉந் தொன்மைத் தாதலின்" எனவும், "நீயறிந்தலையோ நெடுமொழியன்றோ?" எனவும் வரிகளின் பொருளை விளக்கும் "அரும்பத"வுரைகாரர், "அடிப்பற்றி வருகின்ற பழமைத்து" என்றும், நெடுமொழி - பெருவார்த்தை, என்றும், பழைதாகப் போதுகின்ற வார்த்தை என்றுமாம் என்றும் பொருள் விளக்குவார். நச்சினார்க்கினியர் பாரதம், தகடூர் யாத்திரை நூல்களைத் தொன்மை எனப் புகலுவர்.

## புராணம்

"தொன்மை" தொன்மம் என்ற இடத்தில் "புராணங்கள்" களப்பிரர் காலத்திற்கு முன்பே முற்காலப் பல்லவர்கள் காலத்தில் வரவு வைக்கப்பட்டன. "புராணன் - புராதனன்" என்ற சொல் சிவத்தைக்

குறிப்பதாய் ஆயிற்று. பாரத - இராமாயணக் கதைகள் ஒளிமழுங்கப் புராணங்கள் கதிர் ஒளி வீசுவனவாயின. கலிங்கப்போர்ச் சிறப்பினைக் கூறவந்த கவிஞர், தம் காலத்தில் பட்டி தொட்டிகளில் எல்லாம்பரவிக் கிடந்த பாரத இராமாயண தேவாசுரப்போர்க் களங்களின் பெருமைகள் ஓயும்படி, கலிங்கத்தில் சோழப்படைகள் பெற்ற வெற்றிகள் குடிமக்களால் கதைகதையாகப் பெருமைபேசி ஓங்கியபுகழ் நிலைத்தது என்று பொருள்படும்படி

*"தேவாசுர இராமயண மாபாரதம் உளவென்று*
*ஓவாவுரை ஓடியும்படி உளது அப்போர்க்களமே"*

எனக் கலிங்கத்துப்பரணி தேவாசுரப்போர் பற்றிக் குறிப்பிடுவது கருதத் தக்கது. தமிழ் மக்களிடையே ஜைன பௌத்தமதங்களின் - வைதிக மதங்களின் நன்கொடையாக - தாக்கமாக - படைப்பாக சைவநெறியில் புராணம் பங்கு பெற்றது. வேதம், ஆகமம், புராணம், இதிகாசம், உள் அடக்கிய செய்திகளே திருமுறைகள். ஆகவே திருமுறையாகிய கடலில் வேதம் முதலியவை சங்கமித்த செய்திகள் ஓதி உரைக்கத்தக்கன. நீதிகள் நினைக்கத்தக்கன.

### புராண விளைவு

எண்ணத்தால் விளைவது ஆசை. ஆசையால் விளைவது ஆர்வம், ஆர்வம் என்பது தண்ணீர் உண்டாலன்றித் தணியாத தாகம்போல, விரும்பிய பொருள்கள் இருந்தாலன்றி வாழமுடியாத இன்றியமையாப் பேராசை. இதனால் விளைவது கோபம். கோபத்தால் விளைவது சாபம்; சூடாறிய பிற்பாடு தோன்றும் குளிர்மை போலக் கோபம் தணிந்தபின் விளைவது அனுக்ரகம். மிகுதியான மகிழ்ச்சியாலும் அனுக்ரகம் விளையலாம். இப்படிப்பட்ட வரலாற்று விளைவுப் பயன்களே புராண விளைவு ஆகும். (Samaya Bodha Lecturer's By Dharmapuram Adhinam Page.65)

### புராண பலன்

புராணங்களால் மூன்று கால நிகழ்ச்சிகளையும் அறியலாம். மொழி சம்பந்தமான ஆராய்ச்சி, சொற்பியோகங்கள், நன்று தீது பலன்கள் - விசேடக் குறிப்புகள், மனிதன் இறந்தபின்பு அடையும் மாறுதல்கள், ஆன்மாவுக்குத் தனு, கரண, புவன போகங்கள் எவ்வாறு கிட்டும்

என்பதும், காலத்தின் சிற்றளவு, பேரளவு, புராணக் கதைகளின் நுட்பம் முதலியவை நமக்குப் புராணங்கள் பலனாகவும், கடைப்பிடிக்க வேண்டிய செய்திகளாகவும் வழங்கிக்கொண்டுள்ளன. இப்புராணங்களை வேத வியாசர் மூலமாக சூதமுனிவர் உலகிற்கு உதவியதாகக் கூறப்படுகிறது. இதனைத் திருஞானசம்பந்தரும் சூதன் "ஒலிமாலை" என்று குறிப்பிடுவது அறியத்தக்கது.

## திருநாவுக்கரசரின் சிந்தனைகள்

தோத்திரமோ சாத்திரமே புராணமோ "கடவுளே" அவற்றில் உருக்கொண்டு, அருளப் பெற்றிருந்தால்தான் அவற்றின் பயன் உயிர்க்கு உண்டாகிறது. கடவுளும் கடவுளருள் பெற்ற சான்றோரும் முன்னிலை வகிக்காத வகையில் வந்த, பிறர் தோத்திர சாத்திர புராணங்கள் எவர்க்கும் பயன்படா. இவ்வுண்மையை நிறுவப்பற்பல நூற்கள் உள்ளன. திருநாவுக்கரசர் அதனைத் தம் வாக்கால் "பண்ணிய சாத்திரப் பேய்கள்" என்று அடையாளங்காட்டி ஒதுக்குவர். தங்காலத்தில் விளங்கிய ஜைனபுத்த சமயப் புராணங்கற்ற அப்பர் அவற்றை மனதுள் வாங்கி, சிவபுராணமே சிந்திக்கத்தக்கது என்று சிவத்தை முன்னிறுத்தும் பாங்கில் தலைப்பட்டு சிவபுராணத்துள் உள்ள பதினொரு திருவிளையாடல்களை தசபுராணப் பதிகத்தில் வெளிப்படுத்துகிறார். அப்பதிகத்தை அன்பர்கள் அப்பர் திருமுறையில் ஓதி இன்புறலாம். ஈண்டு தசபுராணக் கருத்து நுட்பம் மட்டும் சிந்திக்கப்படுகிறது ஒருபாடல் மூலமாக.

## புராணச்சிந்தனை I

அருள்கொண்டு சிவபெருமான் நஞ்சுண்டு உய்வித்த வரலாறு முதற்பாடலில் ஓதப்படுகிறது. புறநானூற்றில் "நீலமணிமிடற்று ஒருவன்போல மன்னுக" என்ற தொடர்க்கு இவ்வப்பர் பாடல் ஒன்றே அரும்பெரும் விளக்கமாக உள்ளது. இப்பாடலில் வடவரையை மத்தாக்கி, வாசுகியை நாணாக்கித் திருப்பாற்கடலைக் கடைந்தபோது, நஞ்சு எழுதல் கண்டு, அஞ்சிக் கடைதலைக் கைவிட்டு விண்ணவர் ஓடிச் சென்றனர். "இதற்கோர் கழுவாய் வேண்டும் அருள்செய்க" என்று தேவர்கள் வேண்ட இறைவன் பேரிரக்கங்கங் கொண்டு, நஞ்சென்று கருதாமல், அதனை உண்டும் நின்றான்".

திருமால் நிலை

திருமால் நிறம் நீலமேனியாக்கியது அந்நஞ்சு. விண்ணவரும் அந்நஞ்சை, பிறர் எரியாமல் காக்க வேண்டும் என்று வைத்த விண்ணப்பம், அரனாரால் ஏற்கப்பட்டு உண்டார் என்பது புராணச் செய்தி கொண்ட முதற்பாடலில், சிவன் ஒருவனே "அண்டர் அண்டர் அரசு" என்றும், அவன் ஒருவனே "புகல்" நமக்கு என்றும், திருமால் நிலையும் உணர்த்தப்படுகிறது.

நிறைவுரை

தச்புராண முதற்பாடல், "வெலற்கரிய செயலாற்றி வென்றதிறம் தோன்ற வெற்றிக் கொடிதூக்கிய சிவமே ஒப்பிலி"என்று தருமையாதீன உரைக்குறிப்பு முற்றுப்புள்ளி வைத்து முடிவுகூறும். இம்முதற் பாடலில் திருமால் நிறம் மாறியது. தேவர்கள் பயந்து ஓடியது; சிவபிரானைச் சரணடைந்தது. கழுவாய் வேண்டிக் கழலடி பணிந்தது; அதனால் அருள்சூல் கொண்டு "மாவிடத்தை" எரியாமல் அரனார் உண்டது; அவர் ஒருவரே அண்டர்கட்கு அண்டர் ஆனது; அவ்வண்டர்களுக்கு அவரே அரசர் - என்றது முதலான செய்திகள் "நீலகண்டன்" - "மணிகண்டன்" என்பதற்குரிய சிவனாரின் பெயர்க் காரணங்கள் தெரியவருவனவாயின. சங்க நூலின் தொடர் விளக்கமும் விளங்குவதாயிற்று. அப்பாடல்,

*பருவரை ஒன்று சுற்றி அரவம் கைவிட்ட*
*இமையோர் இரிந்து பயமாய்த்*
*திருநெடுமால் நிறத்தை அடுவன் விசும்பு*
*சுடுவான் எழுந்து விசைபோய்ப்*
*பெருகிட மற்று இதற்கொர் பிதிகாரம் ஒன்றை*
*அருளாய் பிரானே எனலும்*
*அருள்கொடு மாவிடத்தை எரியாமல் உண்ட*
*அவன் அண்டரண்டர் அரசே.*

-திருநாவுக்கரசர் 4ம் திருமுறை.



# மாணிக்கவாசக!

(மூத்த தமிழறிஞர். பெரும்புலவர். **ப. அரங்கசாமி**)

*அறுசீர் விருத்தப்பா*

பொன்னம் பலத்தில் பறைமுழக்கிப்
புவியில் தென்னந் திசைநோக்கித்
தன்னந் தனியனாய் ஞானநடம்
தா, தீம் தையென ஆடுகிற
முன்னை முழுமுதற் பொருளானை
முற்படு வாச்சிய மாய்ச்சுட்டிச்
சொன்ன வாசகப் பாடல்களில்
சிலவாம் ஐயம் தெளிவிப்பாய்.

*தரவுகொச்சகக் கலிப்பா*

அம்பலத்தே ஆடுகிற அருளாளன் தில்லையினில்
அம்பலத்துப் பொதுவிலுனை வருகவென அழைத்தாங்கே
நும்பிறவி நீக்கியதை நுவன்றனைநீ கீர்த்தியினில்
எம்முள்ளம் கொண்டாய்நீ எம்மான்மணி வாசகனே.

தெய்வத்திரு வாக்காகத் தெளிந்துரை வாசகத்தில்
மெய்ச்சைவத் தத்துவமும் சிவத்துவமும் கூறினையே
ஐயன்நீ சொன்னவற்றுள் அமைந்தசில உட்பொருளை
மையலறத் தெளிவிக்க மன்றாடி வேண்டுவனே.

ஆகமம் ஆகிநின்றும் ஆகமம் தோற்றுவித்தும்
ஆகமம் வாங்கியும் என்றுரைத்தாய் ஐயன்நீ
ஆகமத்தின் பொருளாக அறிஞர்பலர் பலசொல்வர்
ஆகமத்தின் மெய்ப்பொருளை யானறிய உணர்த்துவையே.

ஊனையென நாடகமும் ஞானமென நாடகமும்
ஆனவிரு நாடகங்கள் கூறினையே அவையாவை
ஞானநடத் தரசவனின் பாதச்சிலம் பொலிகேட்டாய்
யானுமந்த ஒலிகேட்க இயலுமெனின் அருள்வாயே.

அணங்கோ(டு) அம்பலவன் ஆடினதாய்க் கூறினையே
அணங்கவள்தான் யாரேயோ ஆடியதும் எதற்காக
கணங்கொண்ட மலைமகளைக் கண்ணுதலான் மணங்கொள்ள
இணங்கியதன் காரணத்தை இயம்புவையோ ஐயாநீ

என்னால் அறியாத பதந்தந்தாய் என்றாயே
உன்னால் அறியாத அந்தபதம் என்னேயோ
பன்னாள் பணிந்தேத்தும் பழவடியார் என்றனையே
சொன்ன பழவடியார் அடையாளம் சொல்வாயே.

ஆலமுண்டான் தன்னடியார் அனைவர்க்கும் அருள்காட்டி
மூலபண் டாரம்மிக வழங்குகிறான் என்றனையே
மூலபண் டாரந்தான் இன்னதெனக் கூறிடினே
காலமுண் டாகயான் கடிதோடிப் பெறுவேனே.

இந்திர ஞாலமென ஈரிடத்தில் கூறினையே
இந்திர ஞாலந்தான் இன்னதென இயம்பிடுவாய்
சந்திரனைத் தேய்த்ததென ஐயாநீ சாற்றினையே
சந்திரனைத் தேய்த்தவர்யார் சந்திரன்செய் தவறென்னோ.

பல்லோரும் காணவுன்றன் பசுபாசம் அறுத்ததென
நல்லோய்நீ நவின்றனையே பசுபாதம் அறுத்திடுதல்
எல்லோர்க்கும் கிட்டிடுமோ பசுபாதத் தத்துவத்தை
பல்லோரும் அறிந்திடவே பகர்ந்திடுவாய் பெருமானே.

பரானு பவமென்றும் சிவானு பவமென்றும்
உரைத்தனையே அவ்விரண்டை யானறிய விளக்குவையோ
வரையுயர்ந்த கழுக்குன்றில் வாமலையாள் பாகத்தன்
திருக்கோலம் காட்டநீ கண்டஅந்தக் கோலமென்னோ.

ஓங்காரத்(து) உட்பொருளாய் ஐயனுனக்(கு) அருளியதை
யாங்களும் அறிந்திடவே அருள்கூர்ந்து கூறுவையோ
ஓங்கிருள்சூழ் சுடுகாட்டில் கழுதுடன் ஆடினனே
ஆங்கனம் ஆடியதன் காரணந்தான் என்னையோ.

சிவபுரத்துள் மணிக்கதவம் திறந்ததுமே செல்வமென
சிவனடியார் கூட்டத்தைச் சேர்ந்துவர அழைத்தனையே
சிவபுரத்துள் அடியேனும் செல்வதற்கு நெறியதனை
உவகையுடன் உரைத்திடுவாய் உம்பர்தொழும் வாசகனே.

உடம்பையிடங் கொண்டவுயிர் ஆன்மாஎன் றிரண்டுள்ளே
உடம்பழிந்த பின்னிறைவன் அடியடைதல் எதுவேயோ
அடைவதுயிர் என்பர்சிலர் ஆன்மாவே என்பர்சிலர்
திடஞான வாசகனே தெளிவிப்பாய் எளியனையே.

வாதவூர் கோவுன்னை வார்சடையன் ஆட்கொள்ள
மாதவத்துக் குருவாக மரத்தடியில் அமர்ந்தணன்காண்
நாதன்நின் வாசகத்தை நனிகேட்டே அருள்வழங்க
ஓதநதிக் கரையதனில் உடம்பிலடி பட்டனனே.

---

His Holiness **Thavathiru Kundrakudi Adigalar** is endowed with the following qualities with the divine blessings of

## ARULMIGU SHANMUGANATHAN

**SIMPLICITY** is the basic living
**HUMANITY** toward humanity is thy behaviour
**ABILITY** in discharge of assignments is thy benchmark
**NATURALISM** in behaviour is thy brand
**MAGNANIMITY** in every deal is thy motto
**UTILITY** is thy objective
**GENEROSITY** to every one is thy direction
**ABSITENENCE** is thy way of life
**NEMISES** is they belief
**ACCESSIBILITY** to the needy is thy nature
**TRUSTWOTHINESS** is thy hallmark
**HUMANITY** in every endeavour is thy pattern
**ANIMISM** is thy faith
**NIRVANA** is they goal

- KR. GANESAN, Singampunari.

# குன்றக்குடி அருள்தரு சண்முகநாதன் திருக்கோயில்

# கந்தர் சஷ்டிப் பெருவிழா

## திருநாள் நிகழ்ச்சி முறை

| | | | | |
|---|---|---|---|---|
| 21-10-2006 | சனி | தேவரகசியம் | | |
| 22-10-2006 | ஞாயிறு | முதல் திருநாள் | அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல், | சூரபன்மன் எதிரெழுந்து வரல் |
| 23-10-2006 | திங்கள் | 2 ஆம் திருநாள் | அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல், | சூரபன்மன் எதிரெழுந்து வரல் |
| 24-10-2006 | செவ்வாய் | 3 ஆம் திருநாள் | அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல், | தாரகன் எதிரெழுந்து வரல் |
| 25-10-2006 | புதன் | 4 ஆம் திருநாள் | அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல், | தாரகன் எதிரெழுந்து வரல் |
| 26-10-2006 | வியாழன் | 5 ஆம் திருநாள் | அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல், | சிங்கமுகன் எதிரெழுந்து வரல் |
| 27-10-2006 | வெள்ளி | 6 ஆம் திருநாள் | அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல், மாலை 2.30 மணி : அம்மையிடம் சக்திவேல் வாங்குதல் 4.35 மணி : வெள்ளி ரதத்தில் அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல் 6-45 மணி : சூரனைத் தடிதலும் ஆட்கொள்ளலும் | |
| 28-10-2006 | சனி | 7 ஆம் திருநாள் | பகல் 11 மணி : திருமுழுக்காட்டு (மகாபிஷேகம்) மாலை 6.00 முதல் 645 க்குள் : தெய்வயானை திருமணம் இரவு 8 மணி : தங்கரதத்தில் அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல் | |

குறிப்பு : எல்லா நாள்களிலும் மாலை 5 மணிக்கு அறுமுகச் செவ்வேள் எழுந்தருளல்

### ஆறாம் திருநாள் சூரசம்காரத்தன்று எழுந்தருளும் வாகனங்களின் விவரம்

| | | | |
|---|---|---|---|
| அருள்தரு அறுமுகச்செவ்வேள் | வெள்ளிரதம் | அருள்தரு முத்துக்கந்தர் | மயில்வாகனம் (வெள்ளி) |
| அருள்தரு விநாயகர் | மூஞ்சூறு வாகனம் | அருள்தரு வீரவாகுதேவர் | குதிரை வாகனம் |
| அருள்தரு பாலசுப்பிரமணியர் | யானை வாகனம் | அருள்தரு தண்டாயுதபாணி | கடா வாகனம் |

**நூறாயிரம் போற்றி (இலட்சார்ச்சனை)**

**22-10-2006** முதல் **26-10-2006** வரை 5 நாட்கள் காலை 8 மணி முதல் மாலை 5 மணி வரையிலும்

**27.10.2006** காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரையிலும்

**ஆறுமுகப்போற்றி (சண்முகார்ச்சனை) + ஆயிரம் போற்றி (சகஸ்ரநாம அர்ச்சனை) = நூறாயிரம் போற்றி (இலட்சார்ச்சனை) நிகழும்.**

குன்றக்குடி வருக! குமரன் அருள் பெறுக!

# "குறள்நெறிக் காட்சியவர்"

(புலவர். திருக்குறள் **நாவை. சிவம்**, மணப்பாறை)

## தமிழர் தவப் பயன்

திருவள்ளுவர் தலைசிறந்த தண்டமிழ் அறிஞர். மனவியலும், உலகியலும் மாண்புற அறிந்த மாமேதை. இவர் எழுதிய திருக்குறள் என்னும் தேன்தமிழ்ப் பனுவல், இவர்தம் பல்துறை அறிவைப் பாரித்தும் பூரித்தும் காட்டும் பல்கலைக்கழகமாகும்.

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்"

எனும் தொல்காப்பிய நூற்பாவுக்கு ஏற்ப, அறம், பொருள், இன்பம் என்ற முப்பாற் பகுப்பில் மாந்த வாழ்வையே நடுவமாகக் கொண்டு மாந்த இனத்தின் வளத்திற்கும், நலத்திற்கும் பொதுமை நோக்கில் புதிய ஒளிகாட்டும் கலங்கரை விளக்கமாய்க் கவினுற மிளிர்கிறது. இது தமிழர் அனைவருக்கும் கிட்டிய தவப்பயனாகும். தமிழர் முகவரி திருக்குறளே எனில் முற்றும் சரியே.

## திருக்குறள் ஓர் புதையல்

திருக்குறளில் காணும் 9310 சீர்களில் வேர்ச்சொற்களாய் அமைந்தவை 4310 ஆகும். தமிழின் புகழ்பாடும் தொல்காப்பியம் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" எனக் குறிக்கும். இதுபோலவே திருக்குறளில் இடம்பெற்ற எல்லாச் சொற்களும் ஏன் ஒவ்வொரு எழுத்தும் கூட பொருள் குறித்துக் காட்டவல்லன. மாந்தரின் மூச்சு வலிவுக்கு ஏற்ப கடலில் முத்து எடுப்பது போல் அறிவாளர்களின் ஆழ்ந்தகன்ற அறிவுக்கு ஏற்ப திருக்குறளும் பொருள் பல புகன்று காட்டும், புதையல் போல் மகிழ்வும் கூட்டும்.

## அறிவு வகை

"அறியாமை அறிவைச் செய்யும்!
அறியாமை அறிவால் உண்டோ!"

என்ற பாவேந்தர் கூற்றுப்படி, நொடிதொறும் அறியப்பெறுவதே அறிவாகும். அறிவு நிலைகளைக் கூறும் நம் திருக்குறள், அஃகி அகன்ற அறிவு (175) காரறிவு (287) புல்லறிவு (331), (846), உண்மையறிவு (373),

மூத்த அறிவு (441), ஆன்ற அறிவு (1022) என்றவாறு இடம் நோக்கி சுட்டி அறிவிக்கும். இத்துடனமையாது செயற்கை அறிவு - உலக இயற்கை அறிவு (637) பற்றியும் பேசும். இது மட்டுமன்றி காட்சி நிலையில் புறக்காட்சி - மனக்காட்சிகளால் பெறும் புலமை அறிவையும் சொல்லாமற் சொல்லும் நமை வெல்லும்.

### காட்சியவர் யார்

மனத்தால் காணும் காட்சியவரை தெளிந்த அறிவுடையார் - குழப்பமில்லாத அறிவுடையார் நடுக்கமில்லா அறிவுடையார் - குற்றமில்லா அறிவுடையார் அசைதல் இல்லா உறுதிகொண்ட அறிவுடையார் எனவும் கூறும்.

ஒவ்வொரு சொல்லும் ஒரு வரலாற்றைச் சுமந்துகொண்டுதான் வாழ்கிறது என்பார் அறிஞர் மாசேதுங். எனவே குறளில் காணும் "காட்சியவர்" என்று முடியும் 5 குறட்பாக்களின் கருத்துக்கு இந்நூற்றாண்டில் தென்புலத்தில் வாழ்ந்த சான்றோர் சிலரின் வாழ்வும் பொருந்துவதாய் உள்ளது. உற்று நோக்கி உறுபொருள் கண்டால் உவப்பூட்டும்.

### புன்மையில் காட்சியவர்

கொண்டல்போல் தண்டமிழ்ப்புலமை பெற்று எழுத்தாலும், பேச்சாலும் இறுதிவரை எழுச்சியூட்டி நின்றவர் நம் தமிழ்த்தென்றல் திரு.வி. கலியாணசுந்தரனார் ஆவர். மணமாகி சில ஆண்டுகளிலேயே மனைவியை இழந்தார். மறுமணம் புரியாமல் ஒருமன உணர்வுடன் புலனடக்கத்துடன் பூந்தமிழ் - குமுகாய நலனுக்கே பாடாற்றி வாழ்ந்தவர். வறுமையுற்று, வாடகை வீட்டில் வாழ்ந்து நோய்வாய்ப்பட்ட நிலையிலும் கல்வித்தந்தை கருமுத்து தியாகராசர், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் வழி துன்ப நீக்கத்திற்காக அன்புடன் உதவி செய்ய விடுத்த காசோலையை ஏற்க மறுத்தவர். வறுமையிலும் செம்மையாய் வாழ்ந்து காட்டியவர். இத்தகு புலம்வென்ற "புன்மைஇல் காட்சியவர்" தமிழ்க்கடல் திரு.வி.க. என்றால் மிகையுண்டோ?

"இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்" -குறள் 174 (வெஃகாமை)

பொருள் : ஐந்து புலன்களையும் அடக்கி வென்ற அறிவுடையவர், தம்மிடம் ஏதுமில்லை என்பதற்காகப் பிறர் பொருளை விரும்பமாட்டார்.

## மாசறு காட்சியவர்

மாத்தமிழ்ப் புலமையுடன் மெய்யறிவு கொண்டு துறவு பூண்டு சொக்கும் தமிழில் சுவைசொட்டப் பேசி சமய உலகில் புரட்சி நடையிட்டவர் தமிழ் மாமுனிவர் குன்றக்குடி அடிகளார் ஆவர். தாம் ஒரு சைவ மடத்தின் தலைவராய் இருந்தும், தம் கழுத்தில் அணிந்திருந்த கழற்றக்கூடாத - பொன்னாலான அக்குமாமணி (உருத்திராக்கம்)யைக் கழற்றி, ஏலம்விட்டு, அத்தொகையைக் கொண்டு குடிநீர்க் குளத்தைத் தூர்வாரச் செய்து குடிநீர்ப் பஞ்சம் நீக்கியவர். சமயக் கொள்கையைத் திருத்தியவர். அறிவியல் பயன் நோக்கில் சிந்திக்க வைத்தவர் செந்தமிழ் ஞானியர் அடிகளார் ஆவர். இத்தகு மாசறுகாட்சியவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் என்று கூறினால் எதிர்ப்பேதுமுண்டோ?

*பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்த்த*
*மாசறு காட்சி யவர்* - குறள் : 199 (பயனில சொல்லாமை)

பொருள் : அறியாமை மயக்கமும், குற்றமும் இல்லாத அறிவுடையவர் பயனில்லாத சொற்களை மறந்தும் சொல்லமாட்டார். (சொல்லால் செயலால் பயன்தருவார் என்பது தெளிவு)

## கடனறி காட்சியவர்

மடமையிலும் அடிமையிலும் வீழ்ந்து கிடந்த தமிழ்க் குமுகாயத்தை தட்டி எழுப்பி தன்மதிப்பு - சமத்துவம், பகுத்தறிவு ஆகிய கொள்கைகளால் விழிப்பூட்டியவர் - வீறுகொள்ளச் செய்தவர், தொண்டு செய்து பழுத்த பழமாய் தூயதாடி மார்பில் விழ - மண்டைச் சுரப்பை உலகு தொழ - மனக்குகையில் சிறுத்தை எழுமாறு வாழ்ந்தவர் ஈ.வே.இராமசாமி பெரியார் ஆவர். நிற்கவும், அமரவும், படுக்கவும் முடியா நிலையிலும், ஆங்.... ஊங்.... என்று துன்ப ஒலி எழுப்பிக் கொண்டே தம் தொண்ணூற்றி நான்கு அகவையிலும் உலாவந்து நாட்டுக்குத் தொண்டு செய்தவர். வீழ்ச்சியுற்ற தமிழ்க் குமுகாயத்தை எழுப்புவதே கடனாகக் கொண்டு வாழ்ந்தவர் ஈரோட்டுச் செம்மல். இத்தகு "கடனறி காட்சியவர்" தந்தை பெரியார் ஈ.வே.இரா என்றால் பிழையுண்டோ?

*இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்*
*கடனறி காட்சி யவர்* - குறள் : 218 (ஒப்புரவறிதல்)

பொருள் : உதவி செய்து வாழும் கடமையறிந்த அறிவுடையவர் தாம் முடியாத நிலைமையிலும் பிறர்க்கு உதவி செய்யத் தயங்கமாட்டார்.

## நடுக்கற்ற காட்சியவர்

மொழி, இனம், நாடு என்னும் முப்படிக் கொள்கையில் விழிப்புடனும், பொறுப்புடனும், சிறப்புடனும் பாட்டாலும், உரையாலும் நெஞ்சுரத்துடனும் முப்பதாண்டுகட்கு மேல் முனைப்புடன் தொண்டாற்றியவர் தனித்தமிழ் அரிமா. பாவலரேறு பெருஞ்சித்திரனார் ஆவார். உலகத் தமிழினத்தின் உய்வுக்காக தென்மொழி, தமிழ் நிலம், தமிழ்ச்சிட்டு ஆகிய ஏடுகள் வழி பண்பாட்டுப் பணிகள் செய்தவர். இவர்தம் அறிவாற்றலும் செறிவார்ந்த குறிக்கோளும் அறியா அரசு 17 முறை இவரைச் சிறை செய்தது. அப்பொழுதும் சிறிதும் கலங்காமல் - கவலாமல் தடுமாறாமல் - தடம் மாறாமல் வெங்களிறாக தமிழ் முழக்கம் இட்டவர். அஞ்சுதல் அறியா அறிவு வேங்கையாக வாழ்ந்து வறுமையில் செம்மை கண்டவர் இத்தகு "நடுக்கற்ற காட்சியவர்" பாவலரேறு பெருஞ்சித்திரனார் என்றால் ஐயமேதுமுண்டோ?

*இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்*
*நடுக்கற்ற காட்சி யவர்.* -குறள் 654 (வினைத்தூய்மை)

பொருள் : கலங்காத அறிவுடையவர் தாம் துன்பப்பட நேர்ந்தாலும் இழிவான செயலைச் செய்யமாட்டார்.

## துளக்கற்ற காட்சியவர்

அன்னைத் தமிழின் அடுக்கு மொழியழகர் - கடமை கண்ணியம் கட்டுப்பாட்டுடன் திராவிட முன்னேற்றக் கழகம் கண்டவர். குடும்ப அன்பால் உடன்பிறப்பைப் பெருக்கியவர். நாத்திறனால் பகைவரும் போற்ற நாடாண்டவர். மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு என்ற மாந்தப் பண்பாளர். தமிழ்நாட்டிற்குத் "தமிழ்நாடு" என்று மீண்டும் பெயர் சூட்டியவர் பேரறிஞர் அண்ணாத்துரை அவர்கள் ஆவார். தாம் அரசுக் கட்டிலில் முதலமைச்சராய் அமர்ந்திருப்பினும் தனக்கென்று ஏதும் தேடிக் கொள்ளாதவர். விரும்பாத செயல் செய்யாத பேரறிஞர் ஆவர். இத்தகு "துளக்கற்ற காட்சியவர்" பேரறிஞர் அண்ணா என்றால் மாற்றம் உண்டோ?

*கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத செய்யார்*
*துளக்கற்ற காட்சி யவர்.* - குறள் 699 (மன்னரைச் சேர்ந்து ஒழுகல்)

பொருள் : பொதுப்பார்வையாக திருக்குறளைப் பார்க்காமல் வையத்துள் வாழ்வாங்கு வாழ வழிகாட்டிய வண்டமிழ் மாமறையாம் திருக்குறளை நம் வாழ்வியலோடு பொருத்திப் பார்த்து சிறப்புற நோக்கி நடையிட்டால் நாமும் நற்காட்சியராவோம். நலங்கனிந்த மாட்சியராவோம்.

❧❧❧

## சிந்தனை வட்டம்

சிறந்ததோர் இதழின் தலையாய அங்கம், தலையங்கம். "மக்கள் சிந்தனை" புரட்டாசித் திங்கள் இதழில் மக்கட் சமுதாய முன்னேற்றச் சிந்தனைகளின் செயல்பாடுகளில் முதன்மையானவரான சீர்வளர்சீர் தவத்திரு. அடிகளார் அவர்கள் அருளிய தலையங்கத்தின் வைரவரிகள், அதனை நிரூபித்தன.

"அண்ணா" என்ற மந்திரச்சொல்லின்
மகிமையுடன் தொடங்கி,
அண்ணா உருவாக்கி வைத்துள்ள சமுதாய
மேம்பாட்டுச் சீர்மைகள்;

பகுத்தறிவுப் பகலவனும் - பேரறிஞரும் - முத்தமிழறிஞரும்
வாழையடி வாழையென நின்று,
உயரிய சமுதாயச் செழுமைக்கு
ஆற்றிய - ஆற்றி வருகின்ற
செம்மாந்த செயல்திறம்;
ஆகியவை குறித்து, தலையங்கம் கூறியவை யாவும்
கருத்துப் பேழை! காலப்பெட்டகம்!

தமிழினச் சமுதாயம்,
எவ்வழியில் - எவர் பாதையில் சென்றால்,
மேன்மேலும் சிறப்புறும் என்பதற்கு
ஓர் தெளிந்த விளக்கம், தலையங்கம்!

மொத்தத்தில் -
செப்டம்பர் இதழ்த் தலையங்கம்!
நல்ல மனமெங்கும் தங்கும்!

அருளிய சீர்வளர்சீர் தவத்திரு. அடிகளார் பெருந்தகை அவர்களின்
பொன்னார் திருவடிகட்கும்; இதழ்
ஆசிரியராகிய தங்கட்கும்
எம் நன்றிமலர்கள், காணிக்கை! — அவிநாசி. **தமிழமுதன்**

## "வள்ளுவர் வழி" தே. கண்ணன் மறைவு!

சென்னை "வள்ளுவர் வழி" மாத இதழ் ஆசிரியர் திரு. தே. கண்ணன் அவர்கள் 11.9.2006 - இரவு 1 மணி அளவில் மறைந்தார். இப்பெருமகனார் அருள்நெறித்தந்தை அடிகளார் பெருமான் தொடங்கிய திருக்குறள்பேரவையில் தொடக்க காலம்முதல் உறுப்பினராக இருந்து உழைத்தவர். "வள்ளுவர் வழி" மாத இதழைத் தம் சொந்தப் பொறுப்பில் பொருட்செலவு செய்து பல்லாண்டுகளாகத் தொடர்ந்து நடத்திவந்த அருந்தொண்டர். இவர்தம் திருக்குறள் தொண்டினை தமிழக அரசு பாராட்டி திருக்குறள் விருது வழங்கிச் சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது. இப்பெருமகனாரின் மறைவு உலகத் திருக்குறள் பேரவைக்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும். இவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்துள்ள இவர் குடும்பத்தினருக்கும் நண்பர்களுக்கும் "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்வதோடு அவர்தம் நல்லுயிர் பேரா இயற்கைப் பெருவாழ்வு பெற இறைஞ்சுகிறது.

**-ஆசிரியர்**

அட்டைப்படம் : கி. சிங்காரவடிவேல்

உ
சிவமயம்





# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்.

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

MAKKAL CHINTHANAI - October 2006 Price Rs. 5-00
Date of Publication 20-10-2006
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு ______________ அவர்கள்

ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166